உ

# அணிந்துரை

என்னை அணிந்துரை எழுதும்படி கேட்பவர்கள் மிகமிகச் சிலரே. அவர்கள் அசட்டுத் தைரியம் கொண்டவர்கள் என்றே கூறுவேன். ஏனெனில், எனக்குச் சொல் நயம் கிடையாது; ஏதாவது ஏடாகோடியாகச் சொல்லிவிடுவேன்.

ஆனல், என் நண்பர் **ஸ்ரீ T. N. இராமச்சந்திரன்** அவர்களைப் பொறுத்த வரையில், இன்று நூல்வடிவில் வந்திருக்கும் அவருடைய பேச்சு என் பண்புக்குறை வைக் காட்டுவதற்கு இடம் கொடுக்கவில்லை.

நூலின் பெயரான **"இருபதே பன்னிரண்டு"** என்பதே **திரு T. N. R.** இன் மேதைமையை விளக்கும். இவ்விரு சொற்களும் பெற்ற இடத்தாலேயே, மாணிக்க வாசகர் மெய்கண்டாருக்கு முற்பட்டவர் என்பதையும். மெய்கண்டார் மாணிக்க வாசகருக்குக் கடன் பட்டவர் என்பதையும் சுட்டியிருக்கிருரே, இத்திறம் யாருக்கு வரும்?

திருவெய்திய தியாகராச செட்டியார் என்ன, கதிரேசன் செட்டியார் என்ன, G.U. போப் என்ன, ச. தண்டபாணி தேசிகர், K. M பாலசுப்பிரமணியன், அடியேன் யாரும் காணமாட்டாத பேருண்மையையன்ரே திரு. **T. N. R.** கண்டறிந்துள்ளார்.

நறுநெய்யில் செய்யப்பட்டு, குங்குமப்பூவும் ஏலமும் மணக்க முந்திரிப்பருப் போடு திராட்சைப் பழமும் கண் சிமிட்ட, வாசலில் நிற்கும் போதே வாயில் நீர் சுரக்கச் செய்யும் அல்வாவுக்கு அணிந்துரையா! உள்ளே சென்று சுவைத்தின்புறுங்ள். அவசரப்படாதீர்கள். ஒரு பக்கம் படியுங்கள்; ஒரு நாழிகை சிந்தனை செய்யுங்கள்.

சைவ சித்தாந்த அறிஞர் உலகில் திரு. **T. N. R.** இந்த மாபெரு நுண்ணிய நூலால் ஒரு நிலையான இடத்தைப் பற்றிக்கொண்டு விட்டார்! அவர் நீடூழி வாழ்க, மேன்மேலும் சைவத்திற்குத் தொண்டு புரிக என்று தில்லைக் கூத்தனை இறைஞ் சுகிறேன்.

3, அண்ணுமலை புரம், **கோ. வன்மீக நாதன்**
தென்னூர், (ஒப்பம்.)
திருச்சிராப்பள்ளி - 620 017.
27-6-79.

# விண்ணப்பம்

**(T. N. R.)**

“**சைவத்தின் மேற் சமயமில்லை**" என்பது சுத்த சைவர்கள் பெற்றிருக்கும் அநுபூதி, அநுபூதியைப் பேச முடியுமா? என்றாலும், பேசாமல் இருக்க முடியுமா?

சிவம் பெருக்கும் திருவாவடுதுறை ஆதீனம் சிவ கைங்கர்யத்தில் அடியேனுக்கும் திருவிடைமருதூர் திருவாளன் திருமுன் சிவஞான போதமாம் திருவாசகம் பற்றிச் சிந்திக்கும் பேறு கிட்டியது. நற்சிந்தனைகள் அச்சு வாகனமேறட்டும் என்று மஞ்சக்கொல்லை ‘இராமசாமி முதலியார் சமய அபிவிருத்தி நிதி'க்குரியார் எண்ணினர். அவ்வெண்ணம் இச்சிறு நூலாக மலர்ந்தது. அவர்களுக்கு அடியேன் கடன்பட்டவனாகிறேன். மகிழ்ச்சி.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியிருப்பவர் திருவாளர் கோ. வன்மீகநாதன் பிள்ளை அவர்கள். அடியேன் மீது புத்திர வாத்ஸல்யம் பாராட்டும் பெருந்தகை அவர். அவர் கூறுகிறார்: திருவெய்திய தியாகராஜ செட்டியார் என்ன, கதிரேசன் செட்டியார் என்ன, G. U. போப் என்ன, K. M. B., அடியேன், தண்டபாணி தேசிகர் யாரும் காணாத பேருண்மையை அல்லவா ஸ்ரீ T. N. R. கண்டுபிடித்திருக்கிறார்!" பிள்ளை அவர்கள் என்ன சொல்லுகிறார் என்பது பற்றி ஒரு வரி: மேலே கூறிய மகான்கள் வழங்கிய ஒளியில் ஓர் உண்மை T. N. R. க்குத் தட்டுப்பட்டு விட்டது என்பதுதான். The dwarf mounted on the shoulders of a giant Commands a better view!

திருவாடுதுறை ஆதீனகர்த்தாவிற்கும், மஞ்சக் கொல்லை அறக்கட்டளையாருக்கும், திருவாளர் கோ. வன்மீகநாதன் பிள்ளை அவர்களுக்கும். இடைமருது மகாலிங்கம் தேவஸ்தான மேலாளர் சிவஸ்ரீ T.N. அருணாசலம் பிள்ளை அவர்களுக்கும்

அடியேனுடைய நமஸ்காரங்களைச் சமர்ப்பிக்கிறேன்.

எல்லாம் அரன் நாமமே சூழ்க!

சேக்கிழார் அடிப்பொடி **T. N. இராமச்சந்திரன்.**

5-7-1979.

உ
சிவமயம்.

1979 - ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 20 - ஆம் தேதி அன்று திருவிடைமருதூர் மகாலிங்கேஸ்வரர் திருக்கோயிலில் நடைபெற்ற ஐந்தாம் திருமுறைக் கருத்தரங் கில், மூன்றும் நாள் நிகழ்ச்சியில், சேக்கிழார் அடிப்பொடி சித்தாந்த அத்வைதி

தஞ்சை வழக்கறிஞர்
**டி. என். இராமச்சந்திரன்**
நிகழ்த்திய உரை

# இருபதே பன்னிரண்டு

*உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்*
*நிலவுலாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்*
*மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.*

*தொல்லை இரும்பிறவி சூழுந் தளை நீக்கி*
*அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே - எல்லை*
*மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்*
*திருவாசகம் என்னும் தேன்.*

*அந்த இடை மருதில் ஆனந்தத் தேனிருந்த*
*பொந்தைப் பரவி நாம் பூவல்லி கொய்யாமோ!*

*கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி*
*மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் - வெண்ணெய் நல்லூர்*
*மெய்கண்டான் என்றுஒருகால் மேவுவரால் வேறின்மை*
*கைகண்டார் உள்ளத்தின் கண்.*

சைவ சித்தாந்தம் வல்ல சகமுணர் சான்றோர் ஆகும்
மெய்வளர் சுவீடன் பார்க்கும் மேதகு ஹாய்சிஸ்டன்னும்
பொய்தபு புலமைப் போப்பும் போற்று கௌதி ஹோமரசும்
மையறு மோட்ச மூலர் மாக்ரிகோல் பார்னெட், மார்ஷல்

என்ற சர்ஜானும் என்ற குட்விலும் மில்டனும்
ஒன்றிய சகப்பிரியன்னும் ஓங்கு மேல்நாட்டாரோடு
நன்றறி புலமை சான்ற நம்பியாம் நல்லசாமி
துன்றிய ரமண சாஸ்திரியும் துதி எனது ஏற்பாராக!

திருமுறைக் கருத்தரங்கு நடைபெறக் காரணமாக உள்ள திருவாவடுதுறை குரு மகா சந்நிதானம் அவர்களுக்கும், குமரகுருபர சுவாமிகளின் மரபு வழித்தோன்ற லாம் திருப்பனந்தாள் காசிமடஅதிபர் அவர்களுக்கும், அடியேன் இக்கருத்தரங்கில் பங்குகொள்ள வாய்ப்பளித்த திருவாளர் டி. என். அருணுசலம்பிள்ளை அவர்களுக்கும், சைவ சித்தாந்தச் செம்மல்களுக்கும், தாய்மார்களுக்கும் அடியேனுடைய வணக்கங் கள்.

பல சொல்லக் காமுறுமல், பயனில சொல்லாமல் ஒரு சில செய்திகளை இங்கு இறைவன் திருவருளை எண்ணியபடியே பேச வந்துள்ளேன்.

"*பலகலை ஆகம வேதம் யாவையினும் கருத்துப்*
*பதிபசுபாசந் தெரித்தல்*" என்னும் சிவப்பிரகாசம்.

நாடிப் புலன்கள் உழுது, பண்படுத்தி, வித்திட்டு, விளைவு செய்து, க்ருஷிக்கு ஏற்பச் சப்த ஸ்பரிஸ ரூப ரஸ கந்த அறுவடையைச் செய்வது என்பது ஒவ்வொரு ஜீவனின் நித்திய விதியாகியிருக்கிறது. "ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு" என்று வள்ளுவம் ஆமோதிப்பும் இதற்குக் கரி பகர்கின்றது.

'உயிரானது உலகத்தில் எந்நாளும் உழல வேண்டியதுதான்' என்று அதன் கபாலத்தில் அழியா எழுத்தாக அயன் எழுதி வைத்தான் என்று கூறல் முடியாது. குறைந்த பக்ஷம் மனிதன் தேவ நிலையை அடைய முயறல் வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. 'வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் நிலை வேட்டு வாழ்' என்றே செந்நாப்போதார் செப்பிப் போந்தார்.

"நூற்றெரு கோடியின் மேற்பட விரிந்தன" என்கிற முறையில், பத்தோடு பதினென்றுய் இருப்பதில் என்ன பெருமை இருக்கிறது? முப்பத்து முக்கோடியில் ஒன்று கூடினுல் என்ன? குறைந்தால் என்ன? என்றுகூடக் கேட்கத் தோன்றுகிறது.

ஆகவே, விண் வாழ்விலும் பல்லோர் போற்ற வாழுதல் வேண்டும் என்ற எண்ணம் தடிக்கத் தலைப்பட்டதில் ஆச்சரியம் ஏதுமில்லை. இதன் விளைவே, பல்லோரும் பணிந்து ஏத்தச் சிவனடிக்கீழ் வதிதல் வேண்டும் என்ற நல்லெண்ண விகசிப்பாகும். ஆயினும், சாலோக சாமிப்பிய பதமுத்திகள் பரமுத்தி ஆகாவே. மலம் முற்றும் அற, பேரின்பத்தில் முக்குளிக்க வேண்டும் என்ற எண்ணம் முற்றி முதிர்ந்து முறுகி முடிந்த முடிவாயிற்று.

சித்த மலம் அறச் சிவமாம்; இதுவே பேரின்பம்.

மேலும் ஒரு சொல்: பேரின்பம் வேறு; இன்பம் வேறு. இன்பம் என்பது ஒரு கோடியாய்ப்பல்கும். "எத்தனை கோடி இன்பம் வைத்தாய்" என்பது எங்கள் அய்யன் பாரதியின் மதம்.

பேரின்பம் என்பது ஒன்றே. இது வேறின்மை கை கண்ட நிலை. ஈறு நிற்கும் ஒன்றில் ஒன்ற, உயிரைப் பேரின்பம் ஸ்நாநிக்கும்.

*"காட்சி அடங்கிக் கருத்து அடங்கிச்*
*செவி காணும் கவிதையும் தான் மடங்கி*
*ஆட்சிக்கு அடங்கிய ஆகத்து உணர்வுகள்*
*அத்தனைக்கும் மேல் ஓர் ஆனந்தமே"*

என்பது திருலோக தரிசனம்.

ஆகவே, ஆனந்தம் என்பது பேரின்பம்; ஏனைய வெற்றின்பம். இந்த ஆனந்தம் என்பது பூவுலகில் இல்லைபோலும் என்ற எண்ணம் மேல் எழுந்தவாரியாகத் தோன்றும். இங்கு உயிர் பெறும் அதிகபக்ஷ மகிழ்ச்சி சந்தோஷம் என்ற அந்தஸ் தைத் தாண்டி அப்பால் செல்வதில்லை போலும்.

சந்தோஷம் மனசுக்கு அதீனம்; ஆனந்தம் மனசுக்கு அதீதம். இஃது எங்கள் ஆசிரியர் வேங்கடத்துக் கந்தனுர் தந்த வெளிச்சம்.

இந்த ஆனந்தத்தை எங்குப் பெறலாம்? இது வினு. ஆனந்தத் தேனிருக்கும் பொந்து இணையிலா இடைமாமருது. இது விடை. இவ்வானந்தத்தோடு வேறின்மை கைகாண்டற்கு உரிய மார்க்கம் சைவ சித்தாந்தம். இச்சைவ சித்தாந்தமே திருவெம் பாவையின் சித்தாந்தம். தோத்திரம் என்ற முறையில் திருவெம்பாவையில் இருபது பாடல்கள் உள. சாத்திரம் என்ற முறையில் சிவஞான போதத்தில் 12 சூத்திரங்கள் உள. என்றுலும், இவ்

விருபதே பன்னிரண்டு.
இதை விளக்கவே இங்கு வந்துள்ளேன்.
சிவஞானபோதம் பற்றி வித்துவான்

கா.மு.சுந்தர முதலியார் கூறியிருப்பது பின்வருமாறு: -

“இச்சிவஞான போதம், சிவபெருமான் திருக்கரத்துட் கொண்டது; நந்திதேவரு க்கும் சனகாதிகளுக்கும் மாணிக்கவாசக சுவாமிகளுக்கும் உபதேசிக்கப்பெற்றது; சிறந்த சைவ சித்தாந்த ஞான முழுமுதல் நூலாய் விளங்குவது; விரிந்த பொருளை உடையது; வேறு எந்நூல்களிலும் இல்லாத மேலான விஷயங்களைத் தன்னகத்துள் கொண்டது; பன்னிரண்டு சூத்திரங்களை உடையது; நாற்பது அடிகளை உடையது; இருநூற்றுப்பதினுறு சொற்கள் உடையது; அச்சொற்களுள் அறுநூற்று இருபத்து நான்கு எழுத்துக்கள் பெற்றது; ஒவ்வொரு வீட்டிலும் பூசித்துப் போற்றப்படுவது; ஒவ்வொருவரும் படித்துச் சிந்தித்துத் தெளிந்து முடிவான அத்துவித முத்தியைப் பெறுதற்கு உரியது. சிவஞான சுவாமிகளால் சிற்றுரையும் பேருரை ஆகிய மாபாடிய மும் அருளப்பெற்றது; எவராலும் மறுக்கப்படாதது; எச்சமய நூல்களுக்கும் அரசாய் விளங்குவது."

திருவெம்பாவை பற்றி Dr. G. U. Pope அவர்கள் “The mystic “Song of the Maidens” forms a pendant to the Morning Hymn” என்று தொடங்கி, "and only the student of the South Indian Saiva philosophy can expect to enter into its spirit " என்று முடிக்கிருர்.

சிவாந்தரங்கமான திருவெம்பாவையானது திருப்பள்ளியெழுச்சிக்கு அமைந்த தோர் நற்பதக்கம். சைவ சித்தாந்த மாணுக்கனுக்கே இதன் உள் ஆர்தல் ஒல்லும்.

திருவெம்பாவை உள்ளிட்ட திருவாசகத்தின் பொருள் யாது? இவ்வாறு தில்ஜல மூவாயிரவர் தென்னவன் பிரமராயரை வினவ, அவர் சிற்சபை போந்து, அங்கு நின்று, உமை காண நம் பொருட்டுப்

“பசும்பொன் மன்றத் தொருதாள் ஊன்றி
வண்டு பாடச் சுடர் மகுட மாடப் பிறைத்
துண்ட மாடப் புலித் தோலு மாடப் பகி
ரண்ட மாடக் குஜலந் தகிலமாட, கருங்
கொண்ட லோடுங் குழற்கோதையோடுங் கறைக்
கண்டன் ஆடும்' ஆடஜலக் காட்டி,

"எம் வாசகத்திற்கு, இக்கனகமார் கவின் செய் மன்றில் அநக நாடகரே பொருள்" - என்று கூறி வான் கலந்தார்.

எட்ட எட்டச் சென்றுலும் எட்டாதிருக்கும் வான் நாடர் காணுத மன்னனுடன் மன்னுவதெங்ஙனே என்பதை வகுத்து வாசகமாக்கி வைக்கப்பட்ட எட்டாந்திரு முறை, நமக்கு எட்டுந்திருமுறை ஆகத் திருவருள் துஜண கொண்டு மணிவாசகத் தில் ஆழங்கால் படுதல் வேண்டும். இதைத் திருவருள் கூட்டி வைக்குமேல், ஊன் கலந்த உயிர் சிவத்தில் கலக்கும்.

செம்மை நலம் அறியாத சிதடரொடும் திரிதரு நிஜலமை விலக்கி, மும்மை மலம் அறுவித்து, முத்தியில் கூட்டும் நெறியே சைவ சித்தாந்த நெறி.

குருவருளால்தான் சீவனுக்கு உய்வு என்பது சித்தாந்தம் செப்பும் செந்நெறி.

குருவை அடைந்த சீடன் மாற்றுயர்வான்; அவகரணங்கள் நீங்கச் சிவகரணங் கள் பெறுவான், இதை விளக்க வந்த குமரகுருபரர், சமத்காரமாய்ச் சொல்லும் செய்தி ஒன்று கேளீர்: "என் குருவை அடைந்தேன். அவர் திருவடி என் தஜலக்கு மணி ஆயிற்று. என்ன ஆச்சரியம்! என் பேர் குறுகியது. குறுக்கம் ஒரு மாத்திரை அளவினதாகும். முன்பு சீவனுய் இருந்த நான் இப்போது சிவனுகிப் போனேன்!"

எற்கமலம் செய்யும் எழில் மாசிலாமணிதன்
பொற்கமலம் சென்னி பொலிவித்தேன் - நற்கமஜல
ஊரில் குறுகினேன் ஓர்மாத்திரை அளவு என்
பேரில் குறுகினேன் பின்.

இப்பாடலை உங்கள் நினைவிற்குக் கொண்டுவர அடியேன் எண்ணியதற்கான காரணத் தை இப்போது சொல்லுகிறேன். முப்பொருள் உண்மையே சைவ சித்தாந்தம். ஆன்மா சீவன் என்று பெயர் பெறுகின்றது. சீவனின் நிலைகள் மூன்று. அவை கேவலம், சகலம், சுத்தம் என்று பேசப்படும்.

கேவல நிலையில் சீவன் ஆணவ மலத்தினுல் பந்திக்கப்பட்டுக்கிடக்கும். இந்நிலையைக் "கல்" என்றும், "பேர் உறக்கம்" என்றும் மணிவாசகர் பேசுவார்.

ஆணவம் என்பது பிறர் கூறும் ஆங்காரம் அன்று. இஃது உயிரின் குற்றம். இதை "the impurity 'born together with' the soul, otherwise called anava, the principle of soul's individuation, the term being formed from அணு atom, atomic smallness" என்று பிரிட்டிஷ் சைவ சித்தாந்தி Gordon Matthews விளக்குகிறுர்,

ஆணவம் இருள் என்றும், இருட்பாவை என்றும், மலம் என்றும், சகஜமலம் என்றும் வழங்கப்படும். செம்பிற் களிம்பு போல், அநாதியே சீவனேடு இணைந்திரு ப்பது ஆணவ மலம். இதனுடைய மறைப்பு ஆற்றலால் ஆன்மா விளக்கம் அற்றுத் தன் விபுத்துவத்தை மறந்து அணுப்பட்டுக் கிடக்கும்.

“ஆன்மா சகச மலத்து உணராது" என்பது சிவஞான போதம். ஆணவத்தி லிருந்து ஆன்மா விடுதலை பெறும் பொருட்டே அதனுடன் இறைவன் மாயா கன்ம மலங்களைக் கூட்டுகிறுன். ஒரு மலம் நீங்க இரண்டு மலங்கள் பயன்படுத்தப் படுகின்றன. அழுக்கினைப் போக்க அழுக்கான உவர்மண் பயன்படுதலை இதற்கு உதாரணம் காட்டுகிறுர்கள். ஆணவமல நீக்கத்திற்காகவே மாயையால் ஆன தநு கரண புவனங்கள் படைக்கப்படுகின்றன. தத்துவங்கள் அனைத்துமே மாயா காரியம். (Evolutes of Maya)

கர்மப் புசிப்பை ஏற்க மாயையால் ஆன உடலைச் சீவனுக்குச் சிவன் உதவுகிறுன். இங்ஙனம் உடலோடு கூடிய நிலை சகல நிலை என்று பேசப்படும்.

இச்சகல நிலையில் ஊரும், பேரும், புசிப்பும், பயிற்சியும் சீவனுக்கு உண்டு. நாம் அனைவருமே சகலர். பாச க்ஷயம் பெற்று, பதியோடு சீவன் கலக்கின்ற நிலை சுத்தம் ஆகும். சுத்த நிலையே முத்தி நிலை என்கிற அந்தமில் பேரின்பம்.

சகல நிலை அடைந்த உயிர் முத்தியை வேட்டுச் செயல் புரியாது வினையைப் பெருக்கித் தருக்கித் திரிகின்றது. "நான் உண்டு உடுத்து இங்கு இருப்பதானேன்" என்றும், “ஊனுர் புழுக்கூடு காத்திங்கு இருப்பதானேன்" என்றும், "பழுதே பிறந்தேன்" என்றும், “வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே" என்றும், “வல்வினைதான் வந்து அடர்வனவே" என்றும், "தலையினுல் நடந்தேன்" என்றும், “வெறுப்பனவே செய்யும் என் சிறுமை" என்றும் சகல நிலையை நீட்டிக்கின்ற சீவனின் அவலநிலை பற்றி மணிவாசகர் பேசுகிறுர்.

சுத்த நிலை சீவனின் குறிக்கோளும் பிறப்புரிமையும் ஆகும். கேவலத்திலிரு ந்து புறப்பட்டுச் சகலத்தின் வழியாகச் சுத்தத்தை உயிர் அடைதல் வேண்டும்.

சித்தாந்த பரிபாஷையின்படி, மறப்பு கேவலம்; மறப்போடு சிவணிய நினைப்பு சகலம், கரத்தல் கேவலம்; பரத்தல் சகலம். இருள் கேவலம்; குறை ஒளி சகலம்; நிறை ஒளி சுத்தம்.

The Sakala stage is a penumbral stage. இந்த அடிப்படையில் மறப்பு, நினைப்பு, நினைப்பற நினைத்தல் என்ற சொற்களைப்பாருங்கள்.

1. ஆன்மா "*மறைந்திட மூடிய மாய* இருள்"
கேவல நிலையைக்குறிக்கும். மறைப்பின் விளைவே மறப்பு.

2. "*அறம்பாவம் என்னும் அருங்கயிற்றுற் கட்டிப்*
*புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி*
*மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை*"
என்பது சகல நிலையைக் குறிக்கும்.

3. "*வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப ஆற்றேன்*"
என்பது முமுக்ஷு நிலையைக் குறிக்கும்.

"சித்த மல மறுவித்துச் சிவமாக்கி" என்பது சுத்த நிலையைக் குறிக்கும். மறப்பு கேவலம்; மறப்போடு கூடிய நினைப்பு சகலம்; நினைப்பற நினைத்தல் சுத்தம்.

இதைத்தான்

"இன்று எனக்கு அருளி இருள் கடிந்து உள்ளத்து எழுகின்ற ஞாயிறே போன்று - நின்ற நின் தன்மை நினைப்பற நினைத்தேன்" என்பார் மணிவாசகர்.

மாயையால் ஆன்மா பெறுவது சிறிது வெளிச்சம். சூரிய உதயம் ஆவதற்கு முன்பு விளக்கு ஒன்று காட்டுகிற ஒளியைப் போன்றது மாயை தருகின்ற வெளிச் சம்.

"விடிவாம் அளவும் விளக்கனைய மாயை" என்றிதனைத் திருவருட்பயன் பேசும்.

சுத்தநிலை என்பது பூர்ண சிவ சூரிய ஒளியாகும். அந்தச் சிவ சூரியன் தோன்றி யதைத்தான் இருள் கடிந்து உள்ளத்து எழுகின்ற ஞாயிறே" என்ற சொற்கள் காட்டு கின்றன.

சுத்த நிலையில் ஆன்மாவிற்குத் தநு கரண புவன போகங்களோடு ஒட்டுறவு இல்லை. இதைத்தான்

*"உற்றாரை யான் வேண்டேன், ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்*
*கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும் இனி அமையும்*
*குற்றாலத்து அமர்ந்து உறையும் கூத்தா உன்குரை கழற்கே*
*கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"*

என்று விளக்குகிறார் மணிவாசகர்.

*"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற*
*கண்ணிலாக் குழவித் தன்மையே கேவலம்."*

இக்கேவலத்தைச் சகலத்தின் மூலம் பதி போக்குவான். கேவலம் நீங்க நம்மை வந்து உறுவனவே, நம்முடைய உற்றார். இவையே தத்துவ தாத்துவீகங்கள்.

முத்தி நெறியாளர் தத்துவ தாத்துவீகங்களை வேண்டமாட்டார். ஊர் வேண்டேன் என்பது புவனத்தை வேண்டாமை; பேர்வேண்டேன் என்பது சீவன் எனும் பெயரைப் பொறுக்காமை; சீவன் சிவனாய் மாறுதல் வேண்டும். கற்றார் என்பது கல்வி அறிவுடையாரைக் குறிக்கும். கல்வி என்பது இங்குப் பசு - பாச ஞானங்கள். இஞ்ஞானங்களால் இறைவனை அறிய முடியாது.

பதியைப் பதிஞானத்தால்தான் அறிய, அடைய முடியும். அவன் அருளாலே அவன்தாள் வணங்கல் இதுவே.

இந்தச் சுத்த நிலையே நமது தேட்டம். இதை அடையத்தான் சீவனின் யாத்திரை தொடர்கிறது. இந்த யாத்திரையையும் அதன் பலனையும் சைவசித்தாந்தம் தசகாரியமாகப் பேசும். இந்தத் தச காரியமே திருவெம்பாவையிலும் பிரதிஷ்டை ஆகி உள்ளது. "பத்துடையீர்! ஈசன் பழவடியீர் பாங்குடையீர்" என்ற இரண்டாம் திருவெம்பாவைப் பாடலில் இதன் குறிப்பைக் காணலாம்.

தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவயோகம். சிவபோகம் என்று இதன் அமைப்பு இருக்கும்.

சிவபோகம் உற்ற ஆன்மா முத்தான்மா. உடல் இருக்கும்போதே இதை அடைதல் கூடும். சிவபோகம் பெற்ற ஆன்மாவிற்கு உடலோடு எந்த உறவுமில்லை. உடலோடு கூடிய நிலையில் விடுதலை பெற்ற ஆன்மா ஜீவன்முத்தன்; உடல் சாய்ந்து போன நிலையில் விதேக முத்தன். இனி அவ்வான்மாவிற்கு,

*"சாவில்லை மூப்பில்லை சாற்றும் பலகோடிச்*
*சங்கிலிப் பிறப்புக்கள் ஏதுமில்லை."*

முத்தியில் பசுவாம் ஆன்மா துய்ப்பது ஆனந்தம், ஆனந்தம், அந்தமில் ஆனந்தம்.

மலங்களை அரித்து ஆனந்தத்தை அளிப்பவன் அரன். விடுதலை உற்ற ஆன்மா

*"மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே."*

அங்கு அனுபவிக்கப்பெறும் ஆனந்தத்தைச் சொல்லில் உரைக்க முடியாது.

*"அத்தன் எனக்கருளியவா*
*ஆர் பெறுவார் அச்சோவே!"*
*அம்மை எனக்கருளியவா*
*ஆர் பெறுவார் அச்சோவே!"*

என்று மட்டும் கூறலாம். அமைச்சர் மணிவாசகர், அடிகள் மாணிக்கவாசகர் ஆன வரலாறு எல்லோருக்கும் தெரியும்.

ஆலமர் செல்வன் திருப்பெருந்துறையிலே, ஒரு குருந்த மரத்தின் நிழலில், தன் சீடர்கள் புடைசூழ அமர்ந்திருந்தான். கடல் ஒலி என முழங்கிய 'ஹரஹர' சப்தம் கேட்டு, பரிகள் வாங்குவான் வேண்டிப் பல லக்ஷம் பொன்னுடன் அங்கு வந்து கொண்டிருந்த மணிவாசகர், முன்னம் அவன் நாமம் கேட்டார்; அருகில் சென்று மூர்த்தி இருக்கும் வண்ணம் கண்டார்; பின்னர் அவன் ஓதிய சிவஞான போதம் கேட்டார்.

*"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்*
*பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானம்*
*உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்*
*தவமுதல்வர் வாதவூரர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்"*

என்றே இதை வருணித்தல் தகும்.

அன்னையை, அத்தனை, அரசனை மறந்தார்; அகன்றார் அகலிடத்தார் ஆசாரத்தை எல்லாம்; தம்மை மறந்தார்; தலைப்பட்டார் தலைவன் தாளுக்கே.

இறையருள் பிடர்பிடித்து உந்த, பூத பரம்பரை பொலிய, அருட்பாக்களை வழங்கலானார் ஆளுடைய அடிகள். இவ்வருளிச்செயலே எட்டாந்திருமுறை.

எட்டாம் திருமுறையில், குறிப்பாகத் திருவெம்பாவையில் 1. பதிமுது நிலையும் 2. உயிரவை நிலையும் 3. இருள்மல நிலையும் 4. அருளது நிலையும் 5. அருள் உருநிலையும் 6. அறியும் நெறியும் 7. உயிரின் விளக்கமும் 8. இன்புறு நிலையும் 9. அஞ்செழுத்து அருள் நிலையும் 10. அணைந்தோர் தன்மையும் தெளிவாக உணர்த்தப் படுகின்றன.

"*நாதன் நாமம் நமசிவாயவே*" என்று அறிவிக்கப்பட்டிருக்கின்றோம். ஐந்தெழுத்து அவன் பெயர் : ஐந்தொழில் அவன் தொழில்; ஐந்து முகங்கள் அவன் முகங்கள்.

இந்த ஐந்து என்ற எண்ணோடு நமக்கு நெருங்கிய சம்பந்தம் உண்டு. ஆன்மா பஞ்ச கஞ்சுகன்; பஞ்ச கிலேசன்; பஞ்ச அவஸ்தை உடையவன்.

ஐந்து அவத்தைகள் உடைய சீவன் ஐந்தொழில் வல்லவனும் சிவனோடு அத்துவித ஐக்கியம் பெறுதல் வேண்டும் என்பதே பாவையின் சித்தாந்தம். இதற்கான பாதையை வகுத்துரைக்கும் நூலே சிவஞான போதம்.

சிவஞான போதத்தை 39 சூர்ணிகளாக வகுத்துக்காட்டியுள்ளார்கள். இம்முப்பத்தொன்பது சூர்ணிகளைத் திருவெம்பாவைச் சொற்றொடர்கள் கொண்டு துல்லியமாக விளக்கிக் காட்டலாம்.

"*ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்*
*சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்*
*மாதே வளருதியோ வன்செவியோ நின் செவிதான்*
*மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி போய்*
*வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து*
*போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்*
*ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே*
*ஈதே யெம்தோழி பரிசு ஏல் ஓர் எம்பாவாய்.*"

பாவையின் முதற் பாடலிது.

அவத்தைகள் ஐந்தும் இங்குப் பேசப்பட்டுள்ளன.

ஜாக்ரம், ஸ்வப்நம், சுஷுப்தி, துரியம், துரியாதீதம் ஆகிய இவை ஐந்து அவத்தைகள்.

முதற் பாடலில் வருகின்ற
கேட்டேயும், ஜாக்ரம்;

மெய்ம்மறந்து, ஸ்வப்நம்;
வளருதியோ, சுக்ஷுப்தி;
ஏதேனும் ஆகாள், துரியம்;
கிடந்தாள், துரியாதீதம்.

சிவனுடைய தொழில்கள் ஐந்து. அவை தோற்றம், திதி, ஒடுக்கம், திரோபாவம், அருளல் என்பவை.

ஐந்தவத்தை யுடைய ஆன்மா ஐந்தொழிலாளனோடு அத்துவிதக் கலப்பு உறுதலு க்கே பாவை வழிகாட்டுகிறது.

முதற்பாட்டில் ஐந்து அவத்தைகள் பேசப்பட்டமைபோல், முடிவான 20 - ஆம் பாட்டில் ஐந்தொழில்கள் பேசப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| தோற்றமாம் பொற் பாதம் | தோற்றம்; |
| போகமாம் பூங்கழல்கள் | திதி; |
| ஈறும் இணையடிகள் | ஒடுக்கம்; |
| நான் முகனும் காணாத புண்டரீகம் | திரோபாவம்; |
| உய்ய ஆட் கொண்டருளும் பொன்மலர்கள் | அருளல். |

ஆன்மா அநாதியான வஸ்து. பதியினைப் போல் பசு பாசம் அநாதி. “பசு பாசத்வ ஸம்யோகாத்" என்னும் வசனத்தினால், அநாதியே பசுத்துவமாகி ஆணவ ப்ரதிபந்தத் தினால் ஜீவான்மாக்கள் எல்லாம் பசு எனப் பெறும் என்பது சிவாக்கிர யோகிகள் கூற்று. கேவல நிலையிலிருந்து ஆன்மா சுத்த நிலையை அடைய எடுக்கின்ற யாத்திரை, நீண்டதும் நெடியதுமான ஒன்று. இதன் தன்மையை ஆன்மா சுலபமாக உணர்வதில்லை.

*“நீண்ட வழியும் நெடுமூச்சு ஒன்றும்*
*நின்று எரியும் சுடரும் ஈண்டு*
*உனது அருளே என்கின்றார்*
*இதற்கு என்னே பொருள் ஐயா!"*

என்று பாசத்திற்கு உட்பட்ட பசு கேட்கும்.

ஜீவ யாத்திரையின் நெடிய போக்கையும், அதனால் தாம் அடைந்த வெக்கை யையும் மணிவாசகர்,

*“புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல் அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்ற இத் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"*

என்று வருணிக்கின்றார்.

ஆயிரங்கால் மரவட்டையாய், நூறு கால் பூரானாய், பல்கால் ஜல மண்டலி யாய். எட்டுக்கால் பூச்சியாய், அறுகால் வண்டாய், நாலுகால் திர்யக்காய், இரண்டு கால் மனிதனாய், காலில்லாப் புழுவினமாய், நீர்வாழ் ஜந்துவாய், ஊர்ந்தும், நடந்தும், நீந்தியும் காலத்தைப் போக்கியிருக்கிறோம். நம்முடைய நடையினால் இம்மண்ணில் சூடு உண்டாக்கி இருக்கிறோம்.

பிறந்து இறந்து சடலமாகிப் போனபோது அச்சடலங்கள் கொளுத்தப்படவே, வானும் புகையுண்டு போயிற்று.

எண்ணற்ற ஆன்மாக்களைக் கர்மவினைக்கு ஈடாகப் பிரமன் 84 லட்சம் ஜன்ம பேதங்களில் உருட்டிப்போடுகிறான். நம்முடைய பிறப்பினால் பிரமன் கைகள் சூடு ண்டு கிடக்கின்றன. ஒருதாய் இருதாயர் பல கோடியராய், நமக்கு அன்னைமார்களும் எண்ணற்றோர். ஒவ்வொரு கர்ப்பமும் தாய் வயிற்றில் சூடேற்றுகிறது. நடந்து நடந்து நம் கால்களும் சூடேறிக் கிடக்கின்றன. வெக்கை, வெக்கை, வெக்கை.... எங்குப் பார்த்தாலும் வெக்கை! இந்த வெக்கை தணிய வேண்டும்.

*"மண்ணும் தணலாற வானும் புகையாற*
*எண்ணரிய தாயும் இளைப்பாறப் - பண்ணுமயன்*
*கையாற வும் அடியேன் காலாற வும்கண்பார்*
*ஐயா திருவையா று"*

என அவ்வூரைத் தஞ்சமடைந்த பட்டினத்துப் பிள்ளை அருளியுள்ளார். ஆன்மா படும் வெக்கைக்குப் போக்குவீடு காட்டுகிறார் மணிவாசகர்.

*"மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்*
*கையாற் குடைந்து குடைந்து உன் கழல் பாடி*
*ஐயா! வழி அடியோம் வாழ்ந்தோம் காண்; ஆரழல் போல்*
*செய்யா! வெண்ணீறாடி! செல்வா! சிறு மருங்குல்*
*மையார் தடங்கண் மடந்தை மணவாளா!*
*ஐயா! நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின்*
*உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்*
*எய்யாமற் காப்பாய் எமையேல் ஓர் எம்பாவாய்."*

“இறைவா! பக்குவத்திற்கு ஏற்பப் படிப்படியாக அழகாக ஆட்கொண்டருளும் திருவிளையாட்டினாலே, உய்தி கூடுகின்றவர்கள் பிழைத்துக் கதி சேரும் வகைகளில் எல்லாம் யாங்களும் படிப்படியாக உய்தி கூடி முடித்தோம்."

"மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடு உற்றோம்"; 'அந்நியம் இன்மையின் அரன் கழல் செலுமே' என்ற சாத்திர விதிப்படி இதுவே பாவையின் சாரம்.

தத்துவப் படிகள் கடந்து. இறை அருளில் முக்குளித்து எழுந்து, உய்தி பெறும் பாங்கே ஆன்மாவினுடையதாம்.

"ஐயா! நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின் உய்வார்கள் உய்யும் வகை எல்லாம் உய்ந்தொ ழிந்தோம்" என்றாலும், முத்தியிலும்கூட மும் முலம் உண்டாம். ஆகவே, “எய்யாமற் காப்பாய், எமையேலோர் எம்பாவாய்" என்கிறார் மணிவாசகர்.

சைவ சித்தாந்தத்தின் பீடபூமி அத்வைதம். ஆன்மா சார்ந்ததன் வண்ணம்; எத்தைச் சார்ந்து உள்ளதோ, அத்தோடு அத்துவிதப்பட்டுக் கிடக்கும்.

ஒன்று ஆணவத்தோடு அத்துவிதப்பட்டுக் கிடக்கும்; இன்றேல், இறையோடு அத்துவிதப்பட்டுக் கிடக்கும்.

"*ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்*
*தாணுவினேடு அத்துவித மாகுநாள் எந்நாளோ*?"

என்பது தவராஜயோகியராம் தாயுமானவர்தம் திருவாக்கு.

சகல நிலையிலும் ஆன்மா கேவலத்தில் பாயும்; சுத்தத்தையும் தொடும். இதையே சித்தாந்தப்படுத்தித் திருவெம்பாவை என்று ஆக்கி அருளியுள்ளார் ஆளுடை அடிகள்.

கேவலத்தைச் சுட்டுகின்ற அடிகளின் சொற்கள் வருமாறு: -

1. வளருதியோ (1)
2. வன்செவியோ நின் செவிதான் (1)
3. போதார் அமளிக்கே நேசமும் வைத்தனையோ (1)
4. இன்னம் புலர்ந்தின்றே (4)
5. கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே (5)
6. உணராய் உணராய்காண் (5)
7. இன்னந்துயிலுதியோ (6)
8. என்னே துயிலின் பரிசு (6)
9. பாடினேம் கேட்டிலையோ (7)
10. வாழீ ஈதென்ன உறக்கமோ (7)

சகல நிலையிலும் ஆன்மா சார்ந்ததன் வண்ணமே. இந்நிலையில் ஆன்மா பாசத்தின் பாலும் அணுகும்; பரமன் பாலும் அணுகும். இதைத் தான் "பாசம் பரஞ்சோதிக்கு என்பாய்" என்றும், "இப்போதார் அமளிக்கே நேசமும் வைத்தனையோ என்றும் அடிகள் குறிப்பிடுவார்.

இறைவனிடம் ஈடுபட ஆன்மா எண்ணும் ஆனாலும், அது வளைய வருவது மாயாகாரியமான பிரபஞ்சத்தில் ஆகவே, மீண்டும் மீண்டும் உலகியலில் பாசத்தில் ஈடுபடும்; சொன்னதை மறந்துவிடும்.

தினமும் மாலையில் மஹாலிங்க தரிசனம் என்று தீர்மானித்து ஒழுகி வரும் ஆன்மா, பழக்கதோஷத்தால் ஒரு மாலையில் படக்காட்சி காணப் போய் விடும். இஃது அனைவரும் அறியும் நிகழ்ச்சி.

இதை மாணிக்கவாசகர்

*"மானே! நீ நென்னலை நாளை வந்துங்களை*
*நானே எழுப்புவன் என்றலும் நாணாமே*
*போனதிசை பகராய்! இன்னம் புலர்ந்தின்றோ?"*

என்று விளக்குவார்.

அன்புடையீர்,

எந்த வகையிற் பார்த்தாலும் திருவெம்பாவை, சிவஞான போதத்தைப்போல் சைவ சித்தாந்தப் பிழிவே ஆகும். பன்னிரண்டு சூத்திரங்களையும் 20 பாவைப் பாடல்களோடு பொருத்திக் காட்ட நேரமில்லை.

ஆகவே, சில நறுக்குகள் மட்டுமே வழங்குகின்றேன்.

1. "*அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்*"
என்பது முதற் சூத்திரத்தின் முதல் அடி.

"*சகம் பிறப்பு இருப்பு இறப்பாகிய முத்தொழில் உடையது*"

என்பது சூர்ணி.

அவை என்பது ப்ரபஞ்சத் தொகுதி. அவை என்றுலும் சபை என்றுலும், சவை என்றுலும் பொருள் ஒன்றே. Assemblage என்பது இதன் பொருள்.

அண்ட பேரண்டங்கள் 'அவை' யுள் அடங்கும். இந்த அவை. அவன் அவள் அது என்ற மூன்றினுள் அடங்கும். Engender செய்யப்பட்ட அனைத்துமே Masculine, Feminine, Neuter என்ற மூன்று genders உள் அடங்கும்.

இதையே "பெண்ணுகி, ஆணுய், பிறங்கொளி சேர் விண்ணுகி, மண்ணுகி" என்று பாவை பகரும்.

ஜகமானது பிறப்பு, இருப்பு, இறப்பு ஆகிய முத்தொழிலையும் உடையது என்பதை, "காத்தும் படைத்தும் கரந்தும்" என்ற பாவைச்சொற்கள் விளங்கும்.

2. "*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்*" என்பது இரண்டாவது அடி.
"*அது இதனுலே உடையது*" என்பது சூர்ணி.

ஈறும் முதலும் துணையாகக் கொண்டே திதி நிகழும். திதிக்குப் பின் ஒடுக்கம். திதிக்குமுன் தோற்றம். இதையே,

"*போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்*
*போற்றி எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்*
*போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம் இணை அடிகள்*"

என்று பாவை கூறும்.

மலத்து உளதாம் என்றல், மலத்தால் மீள உளதாகும் என்பது பொருள்.

மும்மலங்களையும் மோசிக்கவே, திருவெம்பாவையை அருளினர் திருவாத வூரர்.

பாசக்ஷயமே, மலநீக்கமே, எம்பாவையின் குறிக்கோள். அதற்காக ஏற்பட்ட அருள் தீர்த்தாடனமே திருவெம்பாவையில் பேசப்படுகிறது.

"தங்கள் மலங்கழுவுவார் வந்து சார்தலினல்" என்ற பாவைச் சொற்றொடர் இக்கருத்தைச் சாதிக்கின்றது.

**3.** "*அந்தம் ஆதி*" என்பது மூன்றும் அடி.

"மற்று இருவரும் முத்தொழில் படுவர்" என்பது சூர்ணி. அந்தத்தைச் செய்யுங் கடவுளே முதற்கடவுள். "அந்தம்" என்றல் சம்ஹாரம். அஃது அழித்தல்; அஃதாவது ஒடுக்கல் எனும் தொழில். அந்தத்தைச் செய்யுங் கடவுளை "அந்தம்" என்பது "உபசாரம்" அல்லது "ஏற்றுரை" என்னும் முறையாகும்.

ஆதிக்கு முன்னும் அந்தத்திற்குப் பின்னும் இருப்பது சிவம். உண்மையில் அந்தமோ ஆதியோ அற்றதுதான் சிவம். இதைத்தான் மாணிக்கவாசகர்,

"*ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி*" என்பர்.

**4.** அடுத்து, "*அவையே தானேயாய்*" என்ற சிவஞானபோதச் சொற்றொடரைக் காண்போம்.

"*அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்*" என்பது சூர்ணி.

"அவையே தானேயாய்" என்பது அவையேயாய், தானேயாய். அவையே தானேயாய் என்று விரியும்,

அவையேயாய்: முதல்வன் உயிர்களோடு உயிராய்க் கலப்பினல் ஒன்றுகியும்,

தானேயாய்: பொருள் தன்மையினல் உயிர்களினின்று தான் வேறுகியும்,

அவையே தானேயாய்: உயிர்க்கு உயிராதல் தன்மையால் அவ்வுயிர்களே தானேயாக உடனுகியும்

என்று இவற்றின் பொருள் அமைந்துள்ளன.

“அவையேயாய்” என்பதைத் திருவெம்பாவையில் 18 - ஆம் பாடலில் வருகின்ற “பெண்ணுகி, ஆணுய், அலியாய், பிறங்கு ஒளிசேர் விண்ணுகி, மண்ணுகி” என்ற சொற்களும், “தானேயாய்” என்பதை அதே பாட்டில் வருகின்ற “இத்தனையும் வேறுகி” என்ற சொற்களும், “அவையே தானேயாய்” என்பதைக் “கண்ணுர் அமுதமாய் நின்றுன்” என்ற சொற்களும், “இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்த ருளி” என்ற சொற்களும் பிரகடனப்படுத்தும்.

5. “ஆணையின் இருவினையின்” என்பதற்கு இணையான சூர்ணி “உயிர்களுக்குக் கன்ம பலன்களை அரனே கொடுப்பன்” என்பதாம்.

இதையே திருவெம்பாவையது பதினுன்காம் பாடலில் வரும் “பேதித்து நம்மை வளர்த்தெடுத்த” என்ற சொற்கள் விளக்கும்.

6. “போக்குவரவு புரிய” என்பதற்கு இணையான சூர்ணி “உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்” என்பதாகும். “புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல் அசுரர் ஆகித் தேவராய் முனிவராய்த் தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்து” என்று சிவ புராணத்தில் விளக்கப்பட்ட இது, திருவெம்பாவையில்

*“ஐயா நீ ஆட்கொண்டு அருளும் விளையாட்டின்*
*உய்வார்கள் உய்யும் வகை எல்லாம் உய்ந்தொழிந்தோம்”*

என்று வரும்.

7. *“ஆணையின் நீக்கம் இன்றி நிற்கும் அன்றே”*

என்பதை “அரன் சருவ வியாபகன் ஆதலின், தனது ஆணையின் நீக்கமின்றி நிற்பன்” என்று சூர்ணி பேசும்.
இதைப் பதினுறும் பாடலில் வருகின்ற

*"நந்தம்மை ஆளுடையான் தன்னிற் பிரிவிலா*
*எங்கோமான்”* என்ற சொற்றெடர் விளக்கும்.

*“தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும் சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான்”* என்பது திருவருட்பயன்,

"அன்பர்க்கு முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே" என்பது திருவெம்பாவை.

இங்ஙனம் ஒவ்வொரு சூத்திரக் கருத்தும் திருவெம்பாவையால் பேசப்பட்டிருப்பது காணலாம்.

படிக்கிரமேண உப்தி பெற்று, திருவருளும் கூடப்பெற்று, திருவைந்தெழுத்தை விதிப்படிகணித்து, ஏகஞகி இறைபணி நின்று, அயரா அன்பின் அரன் கழலே ஆன்மா அடைதற்கு என்று அருளப்பட்டதே திருவெம்பாவை. பன்னிரண்டு சூத்திரங்களிலும் சித்தாந்தப்படுத்தப்பட்ட சைவமே திருவெம்பாவையின் இருதயம் என்பது அரன் அடியார்களின் அநுபூதி.

---

**பிற்சேர்க்கை**

### மெய்கண்டார் அருளிச்செய்த

# சிவஞானபோதம்

### காப்புச் செய்யுள்

*கல்லால் நிழல்மலே - வில்லா ரருளிய*
*பொல்லார் இணேமலர் - நல்லார் புனேவரே.*

### அவையடக்கம்

"*தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்*
*எம்மை யுடைமை எமையிகழார் - தம்மை*
*உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்*
*புணராமை கேளாம் புறன்.*"

### முதற் சூத்திரம்

"*அவனவ ளதுவெனு மவைமூ வினேமையிற்*
*றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்*
*அந்த மாதி என்மனுர் புலவர்.*"

### இரண்டாஞ் சூத்திரம்

"*அவையே தானே யாயிரு வினேயிற்*
*போக்கு வரவு புரிய வாணேயின்*
*நீக்க மின்றி நிற்கு மன்றே.*"

## மூன்றுஞ் சூத்திரம்

*"உளதில தென்றலி னெனதுட லென்றலின்*
*ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்*
*உண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்*
*மாயா வியந்திர தனுவினு ளான்மா."*

## நான்காஞ் சூத்திரம்

*"அந்தக் கரண கரண மவற்றினொன் றன்றவை*
*சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா (து)*
*அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே."*

## ஐந்தாஞ் சூத்திரம்

*"விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்(கு)*
*அளந்தறிந் தறியா; ஆங்கவை போலத்*
*தாந்த முணர்வின் தமியருள்*
*காந்தங் கண்ட பசாசத் தவையே."*

## ஆறுஞ் சூத்திரம்

*"உணருரு அசத்தெனி னுணரா தின்மையின்*
*இருதிற னல்லது சிவசத் தாமென*
*இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே."*

## ஏழாஞ் சூத்திரம்

*"யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்*
*சத்தே யறியா தசத்தில தறியா (து)*
*இருதிற னறிவுள திரண்டலா வான்மா."*

## எட்டாஞ் சூத்திரம்

*"ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்(டு)*
*அன்னிய மின்மையி னரன்கழல் செலுமே."*

.

## ஒன்பதாஞ் சூத்திரம்

"*ஊனக்கண் பாச முணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி*
*உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்*
*தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.*"

## பத்தாஞ் சூத்திரம்

"*அவனே தானே யாகிய அந்நெறி*
*ஏக னாகி யிறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை யின்றே*."

## பதினொன்றாஞ் சூத்திரம்

"*காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்*
*காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா வன்பி னரன்கழல் செலுமே.*"

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

"*செம்மலர் நோன்றாள் சேர லொட்டா*
*அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ*
*மாலற நேய மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானு மரனெனத் தொழுமே.*"

---

மாணிக்கவாசகர் அருளிச்செய்த

# திருவெம்பாவை

### திருச்சிற்றம்பலம்

1. *ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்*
*சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்*
*மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்*
*மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்*
*வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து*
*போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்*
*ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேஎன்னே*
*ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய்.*

2. *பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்*
*பேசும்போ தெப்போதிப் போதார் அமளிக்கே*
*நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்*
*சீசீ இவையுஞ் சிலவோ விளையாடி*
*ஏசும்இடம் ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்*
*கூசு மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்*
*தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்*
*ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோ ரெம்பாவாய்.*

3. *முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிர்எழுந்தென்*
*அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்*
*தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்*
*பத்துடையீர் ஈசன் பழவடியீர் பாங்குடையீர்*
*புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ*
*எத்தோநின் அன்புடைமை எல்லாம் அறியோமோ*
*சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை*
*இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்.*

4. *ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ*
*வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ*
*எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்*
*கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே*
*விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்*
*கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்*
*உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்*
*தெண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய்.*

5. *மாலறியா நான்முகனுங் காணு மலையினை நாம்*
*போலறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்*
*பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்*
*ஞாலமே விண்ணே பிறவே அறிவறியான்*
*கோலமும் நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டும்*
*சீலமும் பாடிச் சிவனே சிவனே என்று*
*ஓல மிடினும் உணராய் உணராய்காண்*
*ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய்.*

6. *மானே நீ நென்னலை நாளைவந் துங்களை*
*நானே எழுப்புவன் என்றலும் நாணுமே*
*போன திசைபகராய் இன்னம் புலர்ந்தின்றோ*
*வானே நிலனே பிறவே அறிவறியான்*
*தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்*
*வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்*
*ஊனே உருகாய் உனக்கே உறும் எமக்கும்*
*ஏனோர்க்கும் தம்கோனைப் பாடேலோர் எம்பாவாய்.*

7. *அன்னே இவையுஞ் சிலவோ பலஅமரர்*
*உன்னற் கரியான் ஒருவன் இருஞ்சீரான்*
*சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்*
*தென்னாஎன் னாமுன்னம் தீசேர் மெழுகொப்பாய்*
*என்னானை என்னரையன் இன்னமுதென் றெல்லோமும்*
*சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந் துயிலுதியோ*
*வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்*
*என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய்.*

8. *கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்*
*ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்கும்*
*கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை*
*கேழில் விழுப்பொருள்கள் பாடினோம் கேட்டிலையோ*
*வாழியீ தென்ன உறக்கமோ வாய்திறவாய்*
*ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ*
*ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை*
*ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய்.*

9. *முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே*
*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே*
*உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்*
*உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்*
*அன்னவரே எங்கணவர் ஆவா ரவருகந்து*
*சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்*

*இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்*
*என்ன குறையும் இலோமேலோர் எம்பாவாய்.*

**10.** *பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்*
*போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே*
*பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்*
*வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்*
*ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்*
*கோதில் குலத்தரன்தன் கோயில் பிணாப்பிள்ளைகாள்*
*ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார்*
*ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்.*

11. *மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்*
*கையால் குடைந்து குடைந்துன் கழல்பாடி*
*ஐயா வழியடியோம் வாழ்ந்தோம்காண் ஆரழல்போல்*
*செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குல்*
*மையார் தடங்கண் மடந்தை மணவாளா*
*ஐயாநீ ஆட்கொண்டு அருளும் விளையாட்டின்*
*உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்*
*எய்யாமற் காப்பாய் எமையேலோர் எம்பாவாய்.*

12. *ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடும்*
*தீர்த்தன்நல் தில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்*
*கூத்தனில் வானும் குவலயமும் எல்லோமும்*
*காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி*
*வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்*
*ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்டர்ப்பப்*
*பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்*
*ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய்.*

**13.** *பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்*
*அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்*
*தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்*
*எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த*
*பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநம்*
*சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்*
*கொங்கைகள் பொங்கக் குடையும் புனல் பொங்கப்*
*பங்கயப் பூம்புனல் பாய்ந்தாடேலோர் எம்பாவாய்.*

**14.** *காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்*
*கோதை குழலாட வண்டின் குழாமாடச்*

*சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி*
*வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்*
*சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி*
*ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்*
*பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்*
*பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்.*

**15.** *ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்*
*சீரொருகால் வாயோவாள் சித்தம் களிகூர*
*நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்*
*பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்*
*பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்*
*ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்*
*வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி*
*எருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.*

**16.** *முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்*
*என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்*
*மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்*
*பொன்னஞ் சிலம்பின் சிலம்பித் திருப்புருவம்*
*என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்*
*தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு*
*முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே*
*என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்.*

17. *செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்*
*எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்*
*கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி*
*இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்*
*செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை*
*அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை*
*நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்*
*பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.*

**18.** *அண்ணா மலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்*
*விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்*
*கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்*
*தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்*
*பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்*
*விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்*
*கண்ணார் அமுதமாய் நின்றான் கழல்பாடிப்*
*பெண்ணேயிப் பூப்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.*

19. *உன்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்*
*றங்கப் பழஞ்சொல் புதுக்குமெம் அச்சத்தால்*
*எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்*
*எங்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க*
*எங்கை உனக்கல்லால் எப்பணியும் செய்யற்க*
*கங்குல் பகல்எம்கண் மற்றொன்றும் காணற்க*
*இங்கிப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்*
*எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்.*

20. *போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்*
*போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்*
*போற்றிஎல் லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்*
*போற்றிஎல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்*
*போற்றிஎல் லாவுயிர்க்கும் ஈறும் இணையடிகள்*
*போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்*
*போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்*
*போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்.*

திருச்சிற்றம்பலம்.

---